# ॥ श्री लक्ष्मीनृसिंहकरवलंबस्तोत्रम् ॥

## ஸ்ரீலக்ஷ்மீநரஸிம்ஹ கராவலம்ப ஸ்தோத்ரம்

(1)

श्रीमत्पयोनिधिनिकेतन चक्रपाणे
भोगीन्द्रभोगमणिरञ्जितपुण्यमूर्ते ।
योगीश शाश्वत शरण्य भवाब्धिपोत
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸ்ரீமத் பயோநிதி நிகேதன சக்ரபாணே
போகீந்த்ரபோக மணிரஞ்ஜித புண்யமூர்தே!
யோகீச சாச்வத சரண்ய பவாப்திபோத
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

திவ்யமான பாற்கடலில் பள்ளி கொண்ட சக்ரபாணியே! ஆதிசேஷன் உடற்கட்டில் உள்ள மணிகளால் நிறமெய்திய திருமேனி படைத்தவரே! யோகியருக்கும், 'சரணம்' என்று வந்த பக்தருக்கும் நித்ய வாஸஸ்தலம் நீரேயல்லவா? ஸம்ஸாரக் கடலைத் தாண்ட படகுபோல் இருக்கும் ஸ்ரீலக்ஷ்மீ நரசிம்மனே! என்னை கை தூக்கிவிட்டு அருள வேண்டுமே!

(2)

ब्रह्मेन्द्ररुद्रमरुदर्ककिरीटकोटि-
सङ्घट्टिताङ्घ्रिकमलामलकान्तिकान्त ।
लक्ष्मीलसत्कुचसरोरुहराजहंस
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ப்ரஹ்மேந்த்ரருத்ர மருதர்க கிரீட கோடி
ஸங்கட்டிதாங்க்ரிகமலாமல காந்திகாந்த!
லக்ஷ்மீ லஸத்குச ஸரோருஹ ராஜஹம்ஸ
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹிகராவலம்பம்!!

பிரம்மா, இந்திரன், ருத்ரன், மருத்துக்கள், சூர்யன் ஆகியோரது கிரீட முனைகள் வருடும் திருவடித்தாமரைகள் கொண்டவரே! மிக அழகியவரே! லக்ஷ்மியின் மார்பகங்களாகிய தாமரை மீதுறையும் அன்னமே! ஏ லக்ஷ்மீ நானிம்ஹ! எனக்குகைப்பிடி கொடுத்து முன்னேறச் செய்ய வேண்டும்!

(3)

संसारदावदहनाकुलभीकरोरु–
ज्वालावलीभिरतिदग्धतनूरुहस्य ।
त्वत्पादपद्मसरसीशरणागतस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸார தாவதஹனா குல பீகரோரு
ஜ்வாலாவலீபி ரதிதக்ததனூருஹஸ்ய!
த்வத்பாத பத்ம ஸரஸீம் சரணாகதஸ்ய
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மம தேஹிகராவலம்பம்!!

ஸம்ஸாரமாகிய காட்டுத்தீயினால் திகைத்தும், பயங்கரமான பெரிய ஜ்வாலைகளால் பொசுங்கிய உடலையுடையவனும், உமது திருவடியாகிய குளத்தையே நாடிவந்துள்ளவனுமான எனக்கு கை கொடுத்து முன்னெழச் செய்ய வேணுமே!

(4)

संसारजालपतितस्य जगन्निवास
सर्वेन्द्रियार्थबडिशाग्रझषोपमस्य ।
प्रोत्कम्पितप्रचुरतालुकमस्तकस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸார ஜால பதிதஸ்ய ஜகந் நிவாஸ
ஸர்வேந்த்ரியார்த்த படிசாக்ரஜஷோபமஸ்ய!
ப்ரோத்கம்பித ப்ரசுரதாலுக மஸ்தகஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹிகராவலம்பம்!!

ஹே உலகையாளும் உத்தமரே! ஸ்ரீலக்ஷ்மீ நரஸிம்ஹ! ஸம்ஸாரம் என்ற வலையில், புறக்கரணங்களுக்கான இரை கொண்ட தூண்டில் நுனியில் துவளும் மீன் போன்றிருக்கிற வனும், வெகுவாக நடுக்கம் கொண்ட தாடையும், தலையும் உள்ளவனுமான என்னை கை தூக்கி விட வேணுமே!

(5)

संसारकूपमतिघोरमगाधमूलं
संप्राप्य दुःखशतसर्पसमाकुलस्य ।
दीनस्य देव कृपया पदमागतस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸார கூப மதிகோர மகாத மூலம்
ஸம்ப்ராப்ய து:கசதஸர்ப ஸமாகுலஸ்ய!
தீனஸ்ய தேவ க்ருபயா பதமாகதஸ்ய
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

'உலகியல்' என்ற ஆழமான, பயங்கரமான பாழுங் கிணற்றில் வீழ்ந்து, நூற்றுக்கணக்கான துன்பப் பாம்புகள் சூழப் பட்டு தவிக்கும் இந்த நான் உம்மையே நாடிவந்துள்ளேன். தயவுடன் என்னை கை தூக்கி காக்க வேணும்.

(6)

संसारभीकरकरीन्द्रकराभिघात-
निष्पीड्यमानवपुषः सकलार्तिनाश ।
प्राणप्रयाणभवभीतिसमाकुलस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸார பீகர கரீந்த்ர கராபி காத
நிஷ்பீட்யமான வபுஷ: ஸகலார்திநாச!
ப்ராண ப்ரயாண பவபீதி ஸமாகுலஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

ஸம்ஸாரம் என்ற கொடிய யானை துதிக்கையால் அடிப்பட்டு நசுங்கிய உடலையுடையவனும், உயிர் போகும் தருவாயிலும் உலகியல் துன்பம் மிகுந்து திகைத்தும் இருக்கிற என்னை, ஹேலக்ஷ்மீந்ருஸிம்ஹ! நீர் கை கொடுத்து தூக்கி விட வேண்டும். நீர் அனைவரது துன்பத்தையும் போக்குவரன்றோ!

(7)

संसारसर्पविषदिग्धमहोग्रतीव्र-
दंष्ट्राग्रकोटिपरिदष्टविनष्टमूर्तेः ।
नागारिवाहन सुधाब्धिनिवास शौरे
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸாரஸர்ப விஷதிக்த மஹோக்ரதீவ்ர
தம்ஷ்டாக்ர கோடி பரிதஷ்ட விநஷ்டமூர்தே:!
நாகாரிவாஹன ஸுதாப்தி நிவாஸ சௌரே
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

ஸம்ஸாரமாகிய சர்பத்தின் விஷம் தோய்ந்த கொடிய, பல் நுணியால் கடிக்கப்பட்டு அழியவிருக்கும் சரீரத்தையுடைய எனக்கு, ஹே கருட வாஹனரே! அம்ருத கடலில் வாழ்பவரே! லக்ஷ்மீ நரஸிம்ஹ! கை கொடுத்து காப்பாற்ற வேண்டுமே!

(8)

संसारवृक्षमघबीजमनन्तकर्म-
शाखायुतं करणपत्रमनङ्गपुष्पम् ।
आरुह्य दुःखफलिनं पततो दयालो
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸாரவ்ருக்ஷ மகபீஜ மனந்தகார்ம
சாகாயுதம் கரணபத்ர மனங்கபுஷ்பம்!
ஆருஹ்ய து:க பலிநம் பததோ தயாலோ
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

உலகியியல் என்பது ஒரு மரம், அது பாபங்களை விதையாகக் கொண்டது. கணக்கில்லாத கர்மாக்களாகிய கிளைகளையும், புறக்கரணங்களாகிய இலைகளையும், காமமாகிய புஷ்பத்தையும், துன்பமாகிய பழத்தையும் கொண்டது. அதன் மீது ஏறி விழ இருக்கிறேன். ஹே தயாபரனே! லக்ஷ்மீந்ருஸிம்ஹ! எனக்கு கைகொடுத்து காக்க வேண்டுமே!

(9)

संसारसागरविशालकरालकाल–
नक्रग्रहग्रसितनिग्रहविग्रहस्य ।
व्यग्रस्य रागनिचयोर्मिनिपीडितस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸாரஸாகர விசால கரால கால -
நக்ரக்ரஹ க்ரஸித நிக்ரஹ விக்ரஹஸ்ய!
வ்யக்ரஸ்ய ராக நிசயோர்மி நிபீடிதஸ்ய
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மமதேஹி கராவலம்பம்!!

ஸம்ஸாரமாகிய கடலில் மீக நீண்ட, பயங்கர காலமாகிய முதலைப் பிடியில் விழுங்கப்பட்ட உடலையுடையவனும், 'எப்படியாவது பிழைக்க வேண்டும்' என்று திகைத்து நிற்பவனும், பற்று, பாசம் ஆகிய அலைகளால் அலைக்கழிக்கப்பட்டவனுமான என்னை கைகொடுத்து தூக்கி விட வேண்டுமே!

(10)

संसारसागरनिमज्जनमुह्यमानं
दीनं विलोकय विभो करुणानिधे माम् ।
प्रह्लादखेदपरिहारपरावतार
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸார ஸாகர நிமஜ்ஜந முஹ்யமானம்
தீனம் விலோகய விபோ கருணாநிதே மாம்!
ப்ரஹ்லாத கேத பரிஹாரக்ருதாவதார
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

ஸம்ஸாரமாகிய கடலில் மூழ்கி மயக்கமும் துன்பமும் அடைந்த என்னை, ஹே கருணைக்கடலே! வல்லவரே! கவனிக்க வேண்டும். நீர் பிரஹ்லாதன் துயரைப் போக்கவே அவதரித்தவரா யிற்றே! ஹேலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ! எனக்கு கைகொடுத்து காக்க வேணும்.

(11)

संसारघोरगहने चरतो मुरारे
मारोग्रभीकरमृगप्रचुरार्दितस्य ।
आर्तस्य मत्सरनिदाघसुदुःखितस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ஸம்ஸாரகோரகஹநே சரதோ முராரே!
மாரோக்ரபீகர ம்ருக ப்ரசுரார்திதஸ்ய!
ஆர்தஸ்ய மத்ஸர நிதாக ஸுது:கிதஸ்ய
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மம தேஹிகராவலம்பம்!!

ஸம்ஸாரமாகிய கொடிய காட்டில் திரிந்து, காமனாகிய பயங்கரமிருகத்தினால் மிகவும் வாதனை செய்யப்பட்டு, பொறாமை, கர்வம் அகிய கோடையும் ஒருபுறம் வாட்டி வதைக்கிறதே! இவ்வாறு துயரப்பட என்னை, ஹே லக்ஷ்மீந்ருஸிம்ஹ! கைகொடுத்து, அரவணைத்து காக்கவேணுமே!

(12)

बद्ध्वा गले यमभटा बहु तर्जयन्तः
कर्षन्ति यत्र भवपाशशतैर्युतं माम् ।
एकाकिनं परवशं चकितं दयालो
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

பத்வா கலே யமபடா பஹு தர்ஜயந்த:
கர்ஷந்தி யத்ர பவபாசசதைர்யுதம் மாம்:!
ஏகாகிநம் பரவசம் சகிதம் தயாலோ
லக்ஷ்மீந்ருஸிம்ஹ மம தேஹிகராவலம்பம்!!

யமகிங்கரர்கள் என்னை கழுத்தில் கட்டி, அதட்டிக் கொண்டு ஸம்ஸாரபாசங்கள் பின் இழுக்க, எங்கோ இழுத்துச் செல்கிறார்களே. நான் தன்னந்தனியாக, பிறருக்கு அடிமையாகி, பயந்து நடுங்கிக்கொண்டிருக்கிறேனே. ஹேலக்ஷ்மீ ந்ருஸிம்ஹ! தயாலோ! கைகொடுத்து காக்க வேணுமே!

(13)

लक्ष्मीपते कमलनाभ सुरेश विष्णो
यज्ञेश यज्ञ मधुसूदन विश्वरूप ।
ब्रह्मण्य केशव जनार्दन वासुदेव
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

லக்ஷ்மீபதே கமலநாப ஸுரேச விஷ்ணோ
யஜ்ஞேச யஜ்ஞ மதுசூதன விச்வரூப!
ப்ரஹ்மண்ய கேசவ ஜனார்தன வாஸுதேவ
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

ஹேலக்ஷ்மீபதே! கமலநாப! ஸுரேச! விஷ்ணுவே! யஞ்ஞங்களை பாதுகாப்பவரே! யஞ்ஞமேயானவரே! மதுவரக்கனை ஸம்ஹரித்தவரே! உலகவடிவானவரே! வேதங்களை நேசிப்பவரே! கேசவ! ஜநார்தன! வாஸுதேவ லக்ஷ்மீந்ருஸிம்ஹ! என்னை கைதூக்கி விடவேணுமே!

(14)

एकेन चक्रमपरेण करेण शङ्ख-
मन्येन सिन्धुतनयामवलम्ब्य तिष्ठन्।
वामेतरेण वरदाभयपद्मचिह्नं
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम्॥

ஏகேந சக்ரமபரேண கரேண சங்கம்
அந்யேந ஸிந்து தநயா மவலம்ப்ய திஷ்டன்!
வாமேதரேண வரதாபய பத்மசிஹ்நம்
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

ஒரு கையில் சக்ரத்தையும், மற்றதில் சங்கையும், இன்னொன்றில் லக்ஷ்மியைப் பற்றிக் கொண்டும், வலது கையில் வரத- அபய- பத்மங்களையும் தாங்கியவாறு காட்சிதரும் லக்ஷ்மீந்ருஸிம்ஹ! என்னை கைகொடுத்து காக்க வேணும்.

(15)

अन्धस्य मे हृतविवेकमहाधनस्य
चोरैर्महाबलिभिरिन्द्रियनामधेयैः ।
मोहान्धकारकुहरे विनिपातितस्य
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

அந்தஸ்ய மே ஹ்ருதவிவேக மஹாதனஸ்ய
சோரைர்மஹா பலிபிரிந்த்ரிய நாமதேயை;!
மோஹாந்தகார குஹரே விநிபாதிதஸ்ய
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மம தேஹி கராவலம்பம்!!

நானோ குருடனாகி விட்டேன். மேலும், மிக பலம் வாய்ந்த புறக்கரணங்கள் என்ற திருடர்கள் எனது விவேகம் என்ற பெரும் செல்வத்தை களவாடி விட்டனர். இன்னும், மோஹம் என்ற பேரிருள் சூழ்ந்த குகையில் தள்ளப்பட்டும் இருக்கிறேன். ஹேலக்ஷ்மீந்ருஸிம்ஹ! எனக்கு கைகொடுத்து உதவவேணும்.

(16)

प्रह्लादनारदपराशरपुण्डरीक-
व्यासादिभागवतपुङ्गवहृन्निवास ।
भक्तानुरक्तपरिपालनपारिजात
लक्ष्मीनृसिंह मम देहि करावलम्बम् ॥

ப்ரஹ்லாத நாரத பராசரபுண்டரீக -
வ்யாஸாதி பாகவத புங்கவ ஹ்ருந்நிவாஸ!
பக்தானு ரக்த பரிபாலன பாரிஜாத
லக்ஷ்மீ ந்ருஸிம்ஹ மம தேஹிகராவலம்பம்!!

ப்ரஹ்லாதன், நாரதர், பராசரர், புண்டரீகர், வியாஸர் முதலிய பரமபக்தர்களின் ஹ்ருதயத்தில் வசிப்பவரே! பக்தர்களையும், நேசிப்பவர்களையும் பாதுகாப்பதில் கருத்துடையவரே ஹே லக்ஷ்மீந்ருஸிம்ஹ! எனக்கு கை கொடுத்து, பாதுகாப்பு அளிக்க வேண்டுமே!

**(17)**

**लक्ष्मीनृसिंहचरणाब्जमधुव्रतेन**
**स्तोत्रं कृतं शुभकरं भुवि शङ्करेण ।**
**ये तत्पठन्ति मनुजा हरिभक्तियुक्ता –**
**स्ते यान्ति तत्पदसरोजमखण्डरूपम् ॥**

லக்ஷ்மீந்ருஸிம்ஹ சரணாப்ஜ மதுவ்ரதேந
ஸ்தோத்ரம் க்ருதம் சுபகரம் புவி சங்கரேண!
யே தத்படந்தி மனுஜா ஹரிபகத்தியுக்தா:
தே யாந்தி தத்பதஸரோஜமகண்ட ரூபம்!!

லக்ஷ்மீந்ருஸிம்ஹனின் திருவடித்தாமரையில் மொய்க்கும் தேனீயாக இருக்கும் ஸ்ரீசங்கரரால் மங்களகரமான இந்த ஸ்தோத்ரம் இயற்றப்பட்டது. இதை பக்தியுடன் படிப்பவர் ஸ்ரீநாராயணனின் திருவடித்தாமரையை ஏய்துவர்.

லக்ஷ்மீந்ருஸிம்ஹகராவலம்ப ஸ்தோத்ரம் முற்றிற்று.

